**36.பள்ளியிலிருந்து வெளியேறும் போது:** பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹி அல்லா ஹும்ம இன்னீ அஸ்அலுக்க மின் ஃபழ்லிக், அல்லாஹும் மஃ ஸிம்னீ மினஷ் ஷைத்தானிர்ரஜீம். **பொருள்:** அல்லாஹ்வின் பெயர் கொண்டு (வெளியேறுகிறேன்) சாந்தியும் சமாதானமும் அல்லாஹ்வின் திருத்தூதர் மீது உண்டாகட்டும். இறைவா உனது அருட்கொடையை உன்னிடம் வேண்டுகிறேன். யா அல்லாஹ்! விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் என்னை நீ பாதுகாப்பாயாக! (அபூதாவூது)

**أَللّهُمَّ رَبَّ هـذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلاَةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدًا الْوَسِيلَةَ وَالْفَضِيلَةَ وَابْعَثْهُ مَقَامَ مَحْمُودًا الَّذِي وَعَدْتَهُ إِنَّكَ لا تُخْلِفُ الْمِيعاد.**

**37.பாங்கு சொல்லப்படுவதைக் கேட்கும் போது:** பாங்கு சொல்பவர் சொல்வது போலவே சொல்லவேண்டும். ஆனால் **ஹய்ய அலஸ் ஸலாத், ஹய்ய அலல் ஃப லாஹ்** என்று கூறும்போது **லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில் லாஹ்** (அல்லாஹ்வின் துணையின்றி, பாவத்திலிருந்து விலகிக் கொள்ளவும், நன்மை செய்ய சக்தியும் இல்லை) என்று கூற வேண்டும். மற்றவைகளில் பாங்குசொல்பவர் கூறுவது போல வே கூறி முடித்தவுடன், நபி அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்ல வேண்டும். பின்பு, **அல்லாஹும்ம** ரப்ப **ஹாதிஹித் தஃவதித்** தாம்மா, **வஸ்ஸலாத்தில்** காயிமா, **ஆதி முஹம்மதனில் வஸீலத்த** வல் **ஃபழீலத்த** வப் **அஸ் ஹு மகாமன் மஹ்மூதனில்லதீ** வஅத் தா, **இன்னக்க லா துஃக்லி** புல் **மீஆத்.** என்று கூற வேண்டும். இப்படி ஒருவர்

கூறினால் அவருக்கு மறுமையில் எனது சிபாரிசு உறுதியாகி விட் டது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.(புகாரி,)

**பொருள்:**யா அல்லாஹ்! பரிபூரணமான அழைப்புக்கும் நிலை யான தொழுகைக்கும் உரிய ரப்பே! முஹம்மது (ஸல்) அவர் களுக்கு (சுவர்க்கத்தில்) வஸீலா என்ற உயர்ப்பதவியையும் சிறப்பையும் கொடுத்தருள்வாயாக! மேலும் அவர்களுக்கு நீ வாக்களித்த மஹ்மூத் எனும் இடத்தில் அவர்களை நீ எழுப் புவாயாக: நிச்சயமாக நீ வாக்கு மாறுபவன் அல்லன்.

**38.தூங்கும் போது கூறவேண்டியவை:** நீங்கள் உங்களது படுக்கைக்கு வந்தால் ஆயத்துல் குர்ஸியை ஓதிக்கொள் ளுங்கள். ஏனெனில் அப்படி ஓதிக்கொண்டால் அல்லாஹ்வி டமிருந்து உங்களுக்குத் தொடர்ந்து ஒரு பாதுகாவலர் இருந்து கொண்டேயிருக்கிறார். மறுநாள் காலைவரை உங்க ளை ஷைத்தான் நெருங்கவேமாட்டான் என நபி (ஸல்) அ வர்கள் கூறினார்கள்.(புகாரி).**ஆயத்துல்குர்ஸி** (இது திருக் குர்ஆனின் 2வது அத்தியாயத்தில் 255ஆவது வசனமாகும்) **அல்லாஹு லாஇலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம், லாதஃகுதுஹு ஸினதுவ் வலா நவ்ம், ல ஹுமா ஃபிஸ் ஸ மாவாத்தி வமா ஃபில் அர்ழி, மன்தல்லதீ யஷ்ஃபவு இன் தஹு இல்லா பிஇத்னிஹி, யஃலமு மா பய்ன அய்தீஹிம் வமா கல் ஃபஹும் வலா யுஹீதூன பிஷையிம் மின் இல் மிஹி இல்லா பிமா ஷாஅ, வஸிஅ குர்ஸிய் யுஹுஸ் ஸ மாவாத்தி வல்அர்ழ வலாயஊதுஹு ஹிஃப்ழு ஹுமா வஹு வல் அலிய்யுல் அழீம்.** பொருள்: அல்லாஹ் – அவனைத் த விர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறு யாருமில்லை, அவன் என்றென்றும் ஜீவித்திருப்பவன், என்றென்றும் நிலைத்திருப்

பவன், அவனை அசதியோ உறக்கமோ பீடிக்கா: வானங்க ளிலுள்ளவையும் பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன, அவன் அனுமதியின்றி அவனிடம் யார் பரிந்துரை செய்யமு டியும்? (படைப்பினங்களுக்கு)முன்னருள்ளவற்றையும் அவற் றுக்குப் பின்னருள்ளவற்றையும் அவன் நன்கறிவான். அவன் ஞானத்திலிருந்து எதனையும், அவன் நாட்டமின்றி, எவரும் அறிந்து கொள்ள முடியாது. அவனுடைய அரியாசனம் வா னங்களிலும், பூமியிலும் வியாபித்துள்ளது. அவ்விரண்டையும் காப்பது அவனுக்குச் சிரமத்தை உண்டாக்குவதில்லை. அ வன் மிக உயர்ந்தவன். மகிமை மிக்கவன். (2:255)

39. ஆயிஷா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் அறிவிக்கி றார்கள்: நபி (ஸல்) அவர்கள், ஒவ்வொரு இரவிலும் படுக் கச் செல்லும்போது தமது இரு உள்ளங்கைகளையும் சேர்த்து வைத்துக் கொண்டு **குல் ஹுவல்லாஹு அஹத், குல் அவூ து** பிரப் **பில் ஃபலக், குல் அவூது** பிரப் **பின்னாஸ்** ஆகிய அத்தியாயங்களை ஓதி **ஊதுவார்கள்.** பின்பு தமது உடலில் எங் கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் தடவிக் கொள்வார்கள். தலையில் ஆரம்பித்து முகம் மற்றும் தமது உடலின் முற் பகுதியில் தடவிக் கொள்வார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள். (புகாரி,முஸ்லிம்)

40. உங்களில் ஒருவர் படுக்கைக்கு வந்தால் அவர் தமது ஆ டையின் ஒரு ஓரத்தால் தமது படுக்கையைத் தட்டிக் கொள் ளட்டும் ஏனெனில் அவர் போனபின் அதில் என்ன வந்தது எ ன அறியமாட்டார்.பின்பு,**பிஸ்மிகல்லாஹும்ம வழஃத்து ஜன் பீ** வ பிஸ்மிக அர்ஃப வுஹு **இன் அம்ஸக்த நஃப்ஸீ ஃபர் ஹம்ஹா வஇன் அர்ஸல்தஹா ஃபஹ்ஃபழ்ஹா** பிமா **தஹ்**

**ஃபழு பிஹி இபாதகஸ் ஸாலிஹீன்** என்று கூறவும் என நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்(புகாரி). **பொருள்:** அல்லாஹ் வின் பெயர் கொண்டு தூங்கச் செல்கிறேன். அல்லாஹ்வே! (தூங்குவதற்காக) எனது உடலைச் சாய்த்தேன். உனது பெயர் கொண்டே எழுவேன். (தூக்கத்தில்) என் உயிரை நீ கைப்பற்றிக்கொண்டால் அதற்கு நீ கருணை காட்டு வாயாக! அதை நீ (கைப்பற்றாமல்) அனுப்பிவிட்டாயானால், உனது நல்லடியார்களைப் பாதுகாப்பது போலப் பாதுகாத்துக் கொள்வாயாக!

41.ஒரு பணியாள் இருந்து உங்களுக்குப் பணிவிடை செய் வதைவிடச் சிறப்பான ஒன்றை உங்களுக்குச் சொல்லித் தரட்டுமா? அதாவது, நீங்கள் படுக்கச் செல்லும் போது, **சுப்ஹானல்லாஹ்** 33 முறை, **அல்ஹம்து லில்லாஹ்** 33 முறை, **அல்லாஹு அக்பர்** 34 முறை ஓதிக் கொள்ளுங்கள்: அது உங்களுக்கு ஒரு பணியாளைவிடச் சிறப்பானது என்று ரசூல் (ஸல்) அவர்கள், அலீ (ரலி)அவர்களிடமும், ஃபாத்திமா (ரலி) அவர்களிடமும் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)

**أَللَّهُمَّ أَسْلَمْتُ نَفْسِي إِلَيْكَ، وَوَجَّهْتُ وَجْهِي إِلَيْكَ، وَفَوَّضْتُ أَمْرِي إِلَيْكَ، وَأَلْجَأْتُ ظَهْرِي إِلَيْكَ، رَغْبَةً وَرَهْبَةً إِلَيْكَ، لا مَلْجَأَ وَلَا مَنْجَى مِنْكَ إِلا إِلَيْكَ، آمَنْتُ بِكِتَابِكَ الَّذِي أَنْزَلْتَ، وَنَبِيِّكَ الَّذِي أَرْسَلْتَ.**

42.பர்ரா இப்னு ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நீ தூங்குவதற்காக உனது படுக்கைக்கு வந்தால், தொழுகைக்கு ஒழுச் செய்வது போல ஒழுச் செய்து கொள். பின்பு ஒருக்களித்துப் படுத்துக் கொண்டு, **அல்லாஹும்ம அஸ்**

**லம்த்து நஃப்ஸீ இலைக், வவஜ்ஜஹ்த்து வஜ்ஹீ இலைக், வஃபவ்வழ்த்து அம்ரீ இலைக், வஅல் ஜஃத்து ழஹ்ரீ இலைக்,ரஃக்பதன் வரஹ்பதன் இலைக், லா மல் ஜஅ வலா மன்ஜஅ மின்க இல்லா இலைக், ஆமன்து பி கிதாபிகல்லதீ அன்ஸல்த, வ நபிய்யிகல்லதீ அர்ஸல்த** என்று ஓதுவாயாக. அன்றிரவு நீ இறந்துவிட்டால் நீ படைக்கப்பட்ட இஸ்லாமிய மார்க்கத்தின் மீதே இறந்தவனாவாய். அன்றி நீ காலையில் எழுந்தால் நலவாக எழுவாய். இவற்றை உனது பேச்சுக்களில் இறுதியாக ஆக்கிக்கொள். (அதற்குப் பின்பு பேசாமல் உறங்கி விடு) என்று நபி (ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள். (புகாரி). **பொருள்:** யா அல்லாஹ்! என்னை நான் உன்னிடம் ஒப்படைத்து விட்டேன்: என் முகத்தை உன் பக்கம் திருப்பி விட்டேன்: எனது காரியங்கள் அனைத்தையும் உன்னிடம் பொறுப்புச் சாட்டி விட்டேன்: மேலும் நான் உன்னுடைய பொறுப்பில் நன்மையை நாடியும், உனது வேதனைக்கு அஞ்சியும் என்னை அர்ப்பணித்துவிட்டேன். உன்னையன்றி எனக்கு ஒதுங்குமிடமும் வேறு இல்லை. உன்னையன்றி எனக்கு அபயமளிப்போரும் யாருமில்லை. இன்னும் நீ இறக்கியருளிய உனது திருமறை குர்ஆன் மீதும், நீ அனுப்பிய உன் நபியின் மீதும் நான் விசுவாசம் கொண்டேன்.

43.**கனவு:** நல்ல கனவு அல்லாஹ்வின் பாற்பட்டதும். கெட்ட கனவு ஷைத்தான் பாற்பட்டதுமாகும். உங்களில் யாராவது பிரியமான கனவு கண்டால் தமக்குப் பிரியமானவரிடம் மட்டுமே அதைச் சொல்ல வேண்டும். அவர் வெறுக்கின்ற கெட்ட கனவு கண்டால் இடதுபுறம் மூன்று முறை துப்பவும்.

ஷைத்தானின் தீங்கை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும். அவர் படுத்திருந்த நிலையிலிருந்து மாறிப் படுக்கவும். அதை அவர் யாரிடமும் சொல்ல வேண்டாம். அது அவருக்கு எந்தத் தீங்கையும் ஏற்படுத்தாது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

**44.உண்ணும் முன்பும் உண்ட பின்பும் கூற வேண்டியவை:** உங்களில் ஒருவர் உண்ணும் போது **பிஸ்மில்லாஹ்** (அல்லாஹ்வின் பெயர் கூறி உண்ணுகிறேன்) என்று கூறவும். ஆரம்பத்தில் கூற மறந்து விட்டால் (நினைவு வந்தவுடன்) **பிஸ்மில்லாஹி ஃபீ அவ்வலிஹி வ ஆகிரிஹி** (ஆரம்பத்துக்கும் முடிவுக்கும் சேர்த்து அல்லாஹ்வின் பெயர் கூறுகிறேன்) என்று கூறவும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அபூதாவூது, திர்மிதி)

**الْحَمْدُ للهِ الَّذِي أَطْعَمَنِي هذا، وَرَزَقَنِيه مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي ولا قُوَّة.**

**45.உணவு உண்ட பின்னர்:** அல்ஹம்து லில்லா ஹில்லதீ அத்அமனீ ஹாதா வரஸக்கனீஹி மின் கைரி ஹவ்லிம் மின்னீ வலா குவ்வஹ் என்று கூறட்டும் (அபூதாவூது). **பொருள்:** என் சக்தி, வல்லமை, ஆற்றல் ஏதுமின்றி எனக்கு இந்த உணவை வழங்கி உண்ணச் செய்த அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்!

**ذَهَبَ الظَّمَأُ، وَابْتَلَّتِ الْعُرُوقُ، وَ ثَبَتَ الأَجْرُ إِنْ شَاءَ اللّه.**

**46.நோன்பாளி நோன்பு திறந்த போது:** தஹபள்ளமஉ, வப்தல்லதில் உருக்கு, வஸபதல் அஜ்ரு இன்ஷா அல் லாஹ்.

**பொருள்:** தாகம் தீர்ந்து விட்டது; நரம்புகள் நனைந்து விட்டன; அல்லாஹ் நாடினால் நற்கூலி நிச்சயம் கிடைத்தே தீரும். (நஸயி)

**47.தும்மும்போது:** உங்களில் ஒருவர் தும்மினால் **அல்ஹம் துலில்லாஹ்** என்று கூறட்டும். (இதைச் செவியேற்கும்) அவரது சகோதரர் அல்லது தோழர் **யர்ஹமுகல்லாஹ்** (அல்லாஹ் உமக்கு அருள்புரிவானாக) என்று கூறவும். இவர் அவருக்காக யர்ஹமுகல்லாஹ் என்று கூறியதால் தும்மியவர் **யஹ்தீக்குமுல்லாஹு வயுஸ்லிஹு** பாலகும் (அல்லாஹ் உம்மை நேர் வழிப்படுத்தி உமது எல்லாச் செயல்களையும் சீர்படுத்து வானாக) என்று கூறட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)

**48.சேவல் கூவும் போதும், கழுதை கத்தும் போதும் துஆக் கேட்டல்:** சேவல் கூவும் சப்தத்தைக் கேட்டால் அல்லாஹ்வின் அருளைக் கேளுங்கள். ஏனெனில் அது வானவரைப் பார்த்துவிட்டது. கழுதை கத்துவதைக் கேட்டால் விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத்தேடுங்கள். (அதாவது **அவூதுபில்லாஹி மினஷ் ஷைத் தானிர்ரஜீம்** என்று கூறுங்கள்) ஏனெனில் அது ஷைத்தானைப் பார்த்து விட்டது என ரசூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)

اَللَّهُمَّ أَغِثْنَا، اَللَّهُمَّ أَغِثْنَا، اَللَّهُمَّ أَغِثْنَا.

49.மழை **வேண்டிக் கேட்கும் துஆ:** அல்லாஹும்ம அஃகிஸ்னா,அல்லாஹும்ம அஃகிஸ்னா, அல்லாஹும்ம அ

ஃகிஸ்னா. **பொருள்:** யா அல்லாஹ் எங்களுக்கு மழை இறக் கியருள்வாயாக!

اللهم صيبا نافعا.

50.**மழை பெய்யும் போது: அல்லாஹும்ம ஸய்யிபன் நா ஃபிஅன்.** பொருள்: யா அல்லாஹ்! (இம்மழையை) நற்பய னுள்ளதாக ஆக்கியருள்வாயாக! (புகாரி)

مُطِرْنَا بِفَضْلِ اللّٰهِ وَرَحْمَتِهِ.

51.**மழை பெய்த பின்பு:** முதிர்னா பி ஃபழ்லில் லாஹி வரஹ் மதிஹி (அல்லாஹ்வின் கருணையாலும் அருளினாலும் ம ழை பொழிவிக்கப்பட்டோம்) (புகாரி, முஸ்லிம்)

اَللّٰهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا اَللّٰهُمَّ عَلَى الآكَامِ وَالظِّرَابِ، وَبُطُونِ الأَوْدِيَةِ، وَمَنَابِتِ الشَّجَرِ.

52.**மழை கடினமானால்:** அல்லாஹும்ம ஹவாலைனா, வலா அலைனா, அல்லாஹும்ம அலல்ஆகாமி, வழ்ழிராபி, வபுதூ னில் அவ்தியதி, வ மனாபிதிஷ் ஷஜர். **பொருள்:** யா அல் லாஹ்! எங்கள் மீதும் எங்களைச் சுற்றியுள்ள பாகங்கள் மீதும் மழையை இறக்காமல் மலைகள், குன்றுகள், மலைக் கண வாய்கள், காடுகளில் மழையை இறக்குவாயாக!(புகாரி,)

بَارَكَ اللّٰهُ لَكَ، وَ بَارَكَ عَلَيْكَ، وَ جَمَعَ بَيْنَكُمَا فِي خَيْرٍ.

53.**மணமக்களை வாழ்த்த:** பாரக்கல்லாஹு லக்க வபாரக்க அலைக்க வ ஜமஅ பைனகுமா ஃபீ கைர் **பொருள்:** அல் லாஹ் உமக்கு அகத்திலும், புறத்திலும் நல்லருள் புரிவானா

கள்நல்லவை அனைத்திலும் உங்களிருவரையும் ஒன்றிணைப் பானாக! (அபூதாவூது, திர்மிதி)

بِسْمِ اللَّهِ، اَللَّهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا.

54.**உடலுறவு கொள்ளுமுன் ஓதும் துஆ**: பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மா ரஸக்த்தனா **பொருள்**: அல்லாஹ்வின் பெயர் கூறி (உடலுறவு கொள்ள ஆரம்பிக்கின்றேன்) இறைவா! ஷைத்தானின் தீங்குகளை விட்டும் எங்களைப் பாதுகாத்துக் கொள்வாயாக! நீ எங்களுக்கு வழங்கும் மக்கட் செல்வங்களையும் ஷைத்தானின் தீங்கை விட்டும் பாதுகாப்பாயாக! (புகாரி,முஸ்லிம்)

سُبْحَانَكَ اَللَّهُمَّ وَبِحَمْدِكَ، أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ

55.**சபை கூடிக்கலையும் போது**: சுப்ஹானக்கல்லாஹும்ம வபிஹம்திக்க அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லா அன்த அஸ்தக்ஃபிருக்க வஅதூபு இலைக்க. **பொருள்**:இறைவா! நீயே மிகத்தூய்மையானவன்: புகழ் அனைத்தும் உனக்கே உரியது: உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை என்று நான் சான்று கூறு கின்றேன். நான் உன்னிடம் பாவமன்னிப்புக் கோருகின்றேன். எனது பாவத்தை மன்னித்தருள வேண்டு கிறேன். (திர்மிதி, அபூ தாவூது)

بِسْمِ اللَّهِ اَلْحَمْدُ لِلَّهِ الَّذِي سَخَّرَ لَنَا هَذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ.

**56.வாகனத்தில் ஏறியவுடன்:** பிஸ்மில்லாஹி அல்ஹம்து லில்லாஹில்லதீ ஸக்கர லனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன வஇன்னா இலா ரப்பினா லமுன்கலிபூன். **பொருள்:** அல்லாஹ்வின் பெயர் கொண்டு பயணம் துவங்குகின்றேன். இதன் (இந்த வாகனத்தின்) மீது செல்லச் சக்தியற்றவர் களாக இருந்த எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்த அவ்விறைவனுக்கே எல்லாப் புகளும். நிச்சயமாக நாங்கள் எங்கள் இறைவனிடமே மீளக் கூடியவர்களாக இருக் கின்றோம். (அபூதாவூது)

**أَللَّهُ أَكْبَرُ،أَللَّهُ أَكْبَرُ،أَللَّهُ أَكْبَرُ، سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِينَ وَإِنَّا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُونَ) أَللّهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِي سَفَرِنَا هذَا البِرَّ وَالتَّقْوَي وَمِنَ الْعَمَلِ مَا تَرْضَى ، أَللّهُمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هذَا وَاطْوِ عَنَّا بُعْدَهُ، أَللّهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِي السَّفَرِ وَالْخَلِيفَةُ فِي الأَهْلِ، أَللّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ،وكَآبَةِ الْمَنْظَروَسُوءِ الْمُنْقَلَبِ فِي الْمَالِ وَالأَهْلِ (وَإِذَا رجع قَالَهن وزاد فيهن) آيِبُونَ،تَائِبُونَ،عَابِدُونَ، لِرَبِّنَا حَامِدُونَ.**

**57.பயணத்தில் ஓதும் துஆ:** ரசூல் (ஸல்) அவர்கள் பய ணம் செய்வதற்காக வாகனத்தில் ஏறி அமர்ந்தவுடன் **அல் லாஹு** அக்பர் (அல்லாஹ் மிகப்பெரியவன்) என்று மும் முறை கூறுவார்கள். பின்பு, **ஸுப்ஹானல்லதீ ஸக்கர லனா ஹாதா** வமா **குன்னா லஹு** முக்ரினீன **வஇன்னா இலா** ரப் பினா **லமுன்கலிபூன் அல்லாஹும்ம இன்னா** நஸ்அலுக்க ஃபீஸஃபரினா **ஹாதா அல்பிர்ர வத்தக்வா, வமினல் அம**

லி மாதர்ழா, **அல்லாஹும்ம ஹவ்வின் அலைனா ஸஃபர னா ஹாதா, வத்வி அன்னா புஃதா, அல்லாஹும்ம அன் தஸ் ஸாஹிபு ஃபிஸ் ஸஃபர், வல்கலீஃபது ஃபில் அஹ்ல் அல்லாஹும்ம இன்னீ அவூது பிக்க மின் வஃஸாயிஸ் ஸஃபர், வக ஆபத்தில் மன்ழர், வஸூயில் முன்கலப் ஃபில் மாலி வல் அஹ்லி வல்வலத்** என்று ஓது வார்கள். **பொருள்:** அல்லாஹ்வின் பெயர்கொண்டு பயணம் துவங்குகின்றேன். இதன் (இந்த வாகனத்தின்) மீது செல்ல சக்தியற்றவர்களாக இருந்த எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்த அவ்வி றைவன் மிக்கப்பரிசுத்தமானவன். நிச்சயமாக நாங்கள் எங் கள் இறைவனிடமே மீளக்கூடியவர்களாக இருக்கின்றோம். யாஅல்லாஹ்! இப்பயணத்தில் நன்மையையும், இறையச்சத் தையும், நீ பொருந்திக் கொள்ளக்கூடிய நற்செயல்களையும் உன்னிடம் வேண்டுகிறோம்: யா அல்லாஹ்! இப்பயணத்தை எளிதாக்குவாயாக! அதன் தூரத்தைச் (சுருக்கி) சமீபமாக் கிவைப்பாயாக! யா அல்லாஹ்! இப்பயணத்தில், நீயே எனது பயணத் தோழன். நீயே என் குடும்பத்தினருக்கு பிரதிநிதியா கவும் இருக்கின்றாய்: பயணத்தின் கஷ்டங்களிலிருந்தும், நி லை தடுமாறச் செய்யும் துக்ககாட்சிகளிலிருந்தும், (எனது) பொருளிலும் குடும்பத்திலும்,மக்களிலும் கெடுதிகள் நிகழ்வ தைவிட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன் என்று கூறுவார்கள். பயணத்தை முடித்து விட்டு ஊர் திரும்பும் போ து மேற்கூறியவற்றுடன் மேலதிகமாக, **ஆயிபூன, தாயிபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன்** பொருள்: எங்கள் இரட் சகனைப் புகழக்கூடியவர்களாக, வணங்கக்கூடியவர்களாக,

பாவமன்னிப்புக் கோரக்கூடியவர்களாக திரும்புகின்றோம். என்று நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள். (முஸ்லிம்,)

اللهم اكفني بحلالك وأغنني من فضلك عن من سواك.

**58.கடன் தொல்லை, கவலை, கஷ்டங்கள் நீங்க:** அல் லாஹும்மக்ஃபினீ பிஹலாலிக்க அன்ஹராமிக்க வஅஃக்னினீ பிஃபழ்லிக்க அம்மன் ஸிவாக் பொருள்: யா அல்லாஹ்! நீ விலக்கியவற்றை விட்டும் என்னைத் தூரமாக்கி நீ ஆகுமாக் கியவற்றை எனக்குத் தந்து, போதுமாக்கி வைப்பாயாக! மே லும் உன்னிடமின்றிப் பிறரிடம் நான் தேவையாவதை விட் டும் என்னைத் தேவையற்றவனாக்கி வைப்பாயாக!(திர்மிதி)

68.ஒரு நாள் ரசூல் (ஸல்) அவர்கள் பள்ளியில் நுழைந்தார் கள். அங்கே அபூஉமாமா (ரலி) என்ற அன்ஸாரித் தோழ ரைக் கண்டார்கள். அப்போது, அபூஉமாமாவே! தொழுகை யல்லாத நேரத்தில் பள்ளியில் உட்கார்ந்திருக்கிறீரே! என்ன காரணம்? எனக் கேட்டார்கள். அதற்கவர்,அல்லாஹ்வின் தூ தரே! கடன் தொல்லையும், கவலையும், கஷ்டங்களும் என் னை வாட்டி வதைக்கின்றன என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள், நான் உமக்குச் சிலவார்த்தைகளைக் கற்றுத் தரு கிறேன்: அவற்றை நீர் ஓதி வந்தால், அல்லாஹ், உமது கவ லைகளைப் போக்கி, உமது கடன்களையும் தீர்த்து வைப் பான்: நீர் காலையிலும், மாலையிலும்

أَللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْهَمِّ وَالْحَزَنِ، وَأَعُوذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ، وَأَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ وَالْبُخْلِ، وَأَعُوذُ بِكَ مِنْ غَلَبَةِ الدَّيْنِ وَقَهْرِ الرِّجَالِ.

59.அல்லாஹும்ம இன்னீ அவூது பிக்க மினல் ஹம்மி வல்ஹஃஸன், வஅவூது பிக்க மினல் அஜ்ஸி வல் கஸல், வ அவூது பிக்க மினல் ஜுபுனி வல் புக்ல், வஅவூது பிக்க மின் கலபதித் தைனி வகஹ்ரிர் ரிஜால் என்று ஓதிவாரும் என்றார்கள், நான் அதை ஓதி வந்தேன். அல்லாஹ் என் கவலைகளைப் போக்கி என் கடன்களையும் தீர்த்து விட்டான் என்று அபூ உமாமா (ரலி) கூறினார்கள் (புகாரி). **பொருள்:** யா அல்லாஹ்! நிச்சயமாக நான் உன்னிடம் கவலையை விட்டும் துக்கத்தை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன். மேலும் இயலாமையை விட்டும், சோம்பலை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இன்னும் கோழைத்தனத்தை விட்டும், கஞ்சத்தனத்தை விட் டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். இன் னும் கடன் சுமையை விட்டும், மக்கள் அடக்கு முறையை விட்டும் நான் உன்னிடம் பாகாவல் தேடுகிறேன். என்று

**اَلْحَمْدُ للّٰهِ الَّذِي كَسَانِي هٰذَا الثَّوْبَ وَرَزَقَنِيهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلَا قُوَّةٍ.**

60.**ஆடைஅணியும் போது ஓதும் துஆ:** அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ ஹாதஸ் ஸவ்ப வரஸகனீஹி மின் கைய்ரி ஹவ்லிம் மின்னீ வலா குவ்வா **பொருள்:** என் சக்தி, வல்லமை, ஆற்றல் ஏது மின்றி எனக்கு இந்த ஆடையை அணிவித்த அல் லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! (திர்மிதி),

**اَللّٰهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيهِ أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وَخَيْرِ مَا صُنِعَ لَهُ، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَا صُنِعَ لَهُ.**

**61.புத்தாடை உடுத்தும் போது:** அல்லாஹும்ம லகல் ஹம் து, அன்த கஸவ்தனீஹி, அஸ்அலுக்க மின் கைரிஹி வகை ரி மா சுனிஅ லஹு வஅவூ து பிக்க மின் ஷர்ரிஹி வஷர்ரி மா சுனிஅ லஹு **பொருள்:** யா அல்லாஹ்! எல்லாப் புகழும் உனக்கே உரியது.நீயே எனக்கு இந்த ஆடையை அணி வித்தாய். நான் உன்னிடம் இதன் மூலம் (கிடைக்கும்) நன் மைகளையும், இது எதற்காக உருவாக்கப்பட்டுள்ளதோ அந் த நன்மைகளையும் கேட்கிறேன். மேலும் இதன்மூலம் (வி ளையும்) தீமையை விட்டும் இது எந்தத் தீமைக்காக உரு வாக்கப்பட்டதோ அந்தத் தீமையை விட்டும் உன்னிடம் பா துகாப்புத் தேடுகிறேன். (திர்மிதி, )

**أَللّهُمَّ إِنَّا نَجْعَلُكَ فِي نُحُورِهِمْ ،وَنَعُوذُ بِكَ مِنْ شُرُورِهِمْ.**

**62.எதிரிகளையும், அதிகாரமுடையவர்களையும் சந்திக் கும்போது:** அல்லாஹும்ம இன்னா நஜ்அ லுக்க ஃபீ நுஹூரி ஹிம், வநவூதுபிக்க மின் ஷுரூரிஹிம் என்று நபி (ஸல்) கூறுவார்கள் .(அபூதாவூது,).**பொருள்:** யா அல்லாஹ்! அவர் களுக்கு முன்னால் உன்னை ஆக்குகின்றோம். அவர்களின் தீங்குகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம்.

**أَللّهُمَّ إِنّي أَسْأَلُكَ الهُدَى، وَالتُّقَى، والعَفَافَ، والغِنَى.**

63.**அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்கல் ஹுதா, வத்து கா, வல்அஃபாஃப, வல்கினா.** பொருள்:இறைவா நான் உன் னிடம் நேர்வழியையும், இறையச்சத்தையும், நல்லொழுக்கத் தையும்,தன்னிறைவையும் வேண்டுகிறேன் என்று ரசூல்(ஸல்) அவர்கள் துஆக் கேட்பவர்களாக இருந்தனர். (முஸ்லிம்)

اَللّٰهُمَّ اغْفِرْلِي، وَارْحَمْنِي، وَعَافِنِي، وَارْزُقْنِي.

64.ஒரு மனிதர் ரசூல் (ஸல்)அவர்களிடம் வந்து, அல் லாஹ்வின் தூதரே! என் இறைவனிடத்தில் கேட்கும் போது நான் என்ன கேட்க வேண்டும்? எனக் கேட்டார். அதற்கு நபி (ஸல்)அவர்கள், **அல் லாஹும்ம ஃக்ஃபிர் லீ, வர்ஹம்னீ, வஆஃபினீ, வர்ஸுக்னீ** என்று கேள்: இது உனது இவ்வுலக வாழ்வுக்கும், மறுஉலக வாழ் வுக்கும் சேர்த்து போதுமானதாகும் என்று கூறினார்கள். (முஸ்லிம்).**பொருள்**: யா அல்லாஹ்! என்னை மன்னிப் பாயாக. இன்னும் அருள்புரிவாயாக. எனக்கு சுகமளிப் பாயாக. எனக்கு இரணமளிப்பாயாக.

اَللّٰهُمَّ مُصَرِّفَ الْقُلُوبِ صَرِّفْ قُلُوبَنَا عَلَي طَاعَتِكَ.

65.அல்லாஹும்ம முஸர்ரிஃபல் குலூபி ஸர்ரிஃப், குலூபனா அலா தாஅத்திக (முஸ்லிம்).பொருள்: இறைவா!உள்ளங்களைத் திருப்புவோனே! எங்கள் உள் ளங்களை உனக்கு வழிப்படுவதன் பக்கம் திருப்புவா யாக! என்று நபி (ஸல்) அவர்கள் துஆக் கேட்பார்கள்.

اَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ جَهْدِ الْبَلاءِ وَدَرَكِ الشَّقَاءِ وَسُوْءِ الْقَضَاءِ وَشَمَاتَةِ الأَعْدَاءِ.

66.**அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக்க மின் ஜஹ்தில் ப லாயி, வதரகிஷ் ஷகாயி, வசூயில் கழாயி, வஷமாததில் அஃதாயி.** பொருள்:இறைவா! கஷ்டமான சோதனைகளை

விட்டும், கஷ்டங்கள் நேர்வதை விட்டும், மோசமான தீய முடிவை விட்டும், (நான் கஷ்டப்படுவது கண்டு) எதிரிகள் மகிழ்வதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (புகாரி, முஸ்லிம்)

**أَللّٰهُمَّ أَصْلِحْ لِي دِينِي الَّذِي هُوَ عِصْمَةُ أَمْرِي، وَأَصْلِحْ لِي دُنْيَايَ الَّتِي فِيهَا مَعَاشِي، وَ أَصْلِحْ لِي آخِرَتِي الَّتِي فِيهَا مَعَادِي، وَاجْعَلِ الْحَيَاةَ زِيَادَةً لِي فِي كُلِّ خَيْرٍ وَاجْعَلِ الْمَوْتَ رَاحَةً لِي مِنْ كُلِّ شَرٍّ.**

67.அல்லாஹும்ம அஸ்லிஹ்லீ தீனியல்லதீ ஹுவ இஸ்மது அம்ரீ,வ அஸ்லிஹ்லீ துன் யாயல்லத்தீ ஃபீஹா மஆஷி, வ அஸ்லிஹ்லீ ஆகிரதி யல் லத்தீ ஃபீஹா மஆதி, வஜ்அலில் ஹயாத்த ஸி யாததன்லீ ஃபீ குல்லி கய்ர், வஜ் அலில் மவ்த்த ராஹத்தன்லீ மின் குல்லி ஷர். பொருள்: இறைவா! எனது செயல் பாடுகளில் என்னைப் பாதுகாக்கக் கூடிய எனது மார்க்கக் கடமைகளைச் சீர்படுத்தியருள்வாயாக! நான் வாழக்கூடிய என் உலக வாழ்க்கையையும் சீர்படுத்தியருள்வாயா நான் திரும்பச் செல்லக்கூடிய எனது மறுமை வாழ்க்கையையும் சீர்படுத்துவாயாக. என் உலக வாழ்க்கையில் எல்லா நலன்களையும் எனக்கு அதிகரித்திடுவாயாக. எல்லாத் தீங்குகளை விட்டும் எனது மரணத்தை சுகமானதாக ஆக்கியருள்வாயாக. என்று ரசூல் (ஸல்) அவர்கள் கூறுபவர்களாக இருந்தனர். (முஸ்லிம்)

**أَللّٰهُمَّ اغْفِرْلِي خَطِيئَتِي وَ جَهْلِي، وَإِسْرَافِي فِي أَمْرِي، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِي، أَللّٰهُمَّ اغْفِرْلِي جِدِّي وَهَزْلِي، وَخَطَئِي**

وَعَمْدِي، وَ كُلُّ ذٰلِكَ عِنْدِي، أَللَّهُمَّ اغْفِرْلِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ، وَ مَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، أَنْتَ الْمُقَدِّمُ، وَ أَنْتَ الْمُؤَخِّرُ، وَ أَنْتَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيرٌ.

68.அல்லாஹும்ம ஃக்ஃபிர்லீ கதீஅதீ, வஜஹ்லீ, வஇஸ்ராஃபீ ஃபீ அம்ரீ, வமா அந்த அஃலமு பிஹி மின்னீ,அல்லாஹும் மஃக்ஃபிர்லீ ஜித்தீ, வஹஸ்லீ, வகதயீ, வ அம்தீ வகுல்லு தாலிக்க இன்தீ, அல்லாஹும் மஃக்ஃபிர்லீ மா கத்தம்து வ மா அக்கர்த்து வமா அஸ்ரர்த்து,வமா அஃலன்த்து வமா அந்த அஃலமு பிஹி மின்னீ, அந்தல் முகத்திமு, வஅன் தல் முஅக்கிரு வஅந்த அலா குல்லி ஷையின் கதீர். பொருள்:இறைவா! எனது தவறுகளையும், அறியாமல் செய்த பாவங்களையும் மன்னிப்பாயாக! எனது செயல்பாடுகளில் நான் வரம்புகடந்தவற்றையும் மன்னிப்பாயாக! என்னிடம் என்னைவிட எவற்றை அறிந்திருக்கிறாயோ அவற்றையும் மன்னித்து விடுவாயாக! இறைவா! எனது பாவங்களில் விரும்பிச் செய்தவற்றையும், விளையாட்டாகச் செய்தவற்றையும், தவறிச் செய்தவற்றையும், நாடிச் செய்தவற்றையும், இன்னும் என்னிடம் நிகழ்ந்த எல்லாப் பாவங்களையும் மன்னித்துவிடுவாயாக! யா அல்லாஹ்! நான் முந்திச் செய்த பாவங்களையும், பிந்திச் செய்த பாவங்களையும், மறைமுகமாகச் செய்தபாவங்களையும், பகிரங்கமாகச் செய்த பாவங்களையும், என்னிடம் என்னைவிட எவற்றை நீ அறிந்திருக்கிறாயோ அவற்றையும் மன்னித்து விடு வாயாக! இன்னும் நீயே முதலானவன்! நீயே முடிவானவன்! இன்னும் அனைத்தின் மீதும் நீயே பேராற்றல் உள்ளவனாக இருக்கிறாய். (புகாரி)

أَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْبَرَصِ، وَالْجُنُونِ، وَالْجُذَامِ، وَسَيِّيءِ الأَسْقَامِ.

69.அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக்க மினல் பரஸி, வல் ஜுனூனி, வல் ஜுதாமி, வ ஸய்யில் அஸ்காம். பொருள்: இறைவா! வெண்குஷ்டத்தை விட்டும், பைத்தியத்தை விட்டும், கருங்குஷ்டத்தை விட்டும், இன்னும் (மனிதர்கள் வெறுக்கின்ற) தீயநோய்களை விட்டும் நான் உன்னிடம் பாது காப்புத் தேடுகிறேன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறுபவர் களாக இருந்தனர். (அபூதாவூது,)

أَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ مُنْكَرَاتِ الأَخْلَاقِ، وَالأَعْمَالِ، وَالأَهْوَاءِ.

70.அல்லாஹும்ம இன்னீ அவூதுபிக்க மின் முன்கராத் தில் அக்லாக்கி, வல்அஃமாலி, வல்அஹ் வாஃ பொருள்: யா அல்லாஹ்! கெட்ட குணங்களை விட்டும், கெட்ட நடத் தைகளை விட்டும், மனோ இச்சைகளை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறுபவர்களாக இருந்தனர். (திர்மிதி)

**நோய் நீங்க ஓதும் துஆ**

أَللّٰهُمَّ رَبَّ النَّاسِ، أَذْهِبِ الْبَأْسَ، وَاشْفِ، أَنْتَ الشَّافِي لا شِفَاءَ إِلا شِفَاؤُكَ، شِفَاءً لا يُغَادِرُ سَقَمًا.

71.ஆயிஷா (ரலி)அறிவிக்கின்றார்கள்: நபி (ஸல்) அவர் கள், தமது குடும்பத்தாரில் யாரையாவது நோய் விசாரிக்கச் சென்றால், அவரைத் தமது வலது கையால் தடவி, அல்லா ஹும்ம ரப்பன் னாஸ், அத்ஹிபில் பஃஸ், வஷ்ஃபி, அன்

**தஷ் ஷாஃபீ லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாவுக், ஷிஃபா அன் லாயுஃகாதிரு ஸகமா** என்று கூறுவார்கள்.(புகாரி).
**பொருள்**:இறைவா! மக்களைப் படைத்துப் பரிபாலிப்பவனே! நோயைப் போக்கிடுவாயாக! நோய் நிவாரணமளிப்பாயாக! நீயே நோய்களைக் குணமாக்குபவன்! எந்த நோயையும் குணமாக்காமல் விடாத உனது நிவாரணத்தைத்தவிர வேறு நோய் நிவாரணம் இல்லை.

لا بَأسَ طَهُورٌ إنْ شَاءَ اللَّهُ.

**72.நோயாளிக்கு துஆச் செய்தல்**:நபி (ஸல்) அவர்கள் நோயாளியை நோய் விசாரிக்கச் சென்றால் அவரது நோய் பற்றி விசாரித்து, **லா பஃஸ தஹூருன் இன்ஷா அல்லாஹ்** (எந்தப் பிரச்சனையும் இல்லை அல்லாஹ் நாடினால் குணமாகிவிடும்) என்று கூறுவார்கள். (புகாரி)

بِسْمِ اللَّهِ، أَعُوذُ بِعِزَّةِ اللَّهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ.

73.அபூ அப்துல்லாஹ் உத்மான் பின் அபுல் ஆஸ் (ரலி) அவர்கள், தமது உடம்புவலி பற்றி நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், உமது உடலில் வலிக்கும் இடத் தில் உமது கையை வைத்து **பிஸ்மில்லாஹ்** மூன்று முறையும், **அவூது பி இஸ்ஸதில் லாஹி வகுத்ரதிஹி மின்ஷர்ரி மா அஜிது வஉஹாதிரு** (அல்லாஹ்வின் கண்ணியத்தின் மீதும், அவன் ஆற்றலின் மீதும் சத்தியமாக, நான் அனுபவிக்கும் வேதனை,பயம் போன்றவற்றை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்)என்று ஏழு முறையும் கூறும்படிக் கூறினார்கள். (முஸ்லிம்)

إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ أَللَّهُمَّ أْجُرْنِي فِي مُصِيبَتِي وَاخْلُفْ لِي خَيْرًا مِنْهَا.

74.துன்ப துயரங்கள் நேரும் போது: இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிவூன், அல்லாஹும்ம ஃஜுர்னீ ஃபீமுஸீபதீ வக்லுஃப் லீ கைரம் மின்ஹா என்று கூறவேண்டும். (முஸ்லிம்). **பொருள்:** நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். நிச்சயமாக நாம் அவனிடமே திரும்பிச் செல்வோம். யாஅல்லாஹ்! என்னைத் துன்பத்திலிருந்து விடுவித்து அதைவிடச் சிறப்பானதை எனக்குத் தந்தருள்வாயாக!

إِنَّ لِلَّهِ مَا أَخَذَ، وَلَهُ مَا أَعْطَى، وَكُلُّ شَيْءٍ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى، فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ.

75.மரணத்திற்காக, சம்பந்தப்பட்டவர்களுக்கு ஆறுதல் கூற: இன்ன லில்லாஹி மா அகத, வல ஹு மா அஃதா, வ குல்லு ஷையின் இன்தஹு பி அஜலிம் முஸம்மா, ஃபல் தஸ்பிர், வல்தஹ்தஸிப். **பொருள்:** நிச்சயமாக அல்லாஹ் எடுத்துக் கொண்டது அவனுக்குரியதே: அவன் தந்ததும் அவனுக்குரியதே ஒவ்வொன்றுக்கும் அவனிடத்தில் குறிப்பிட்ட கால வரையற உண்டு: எனவே பொறுமையைக் கடைப்பிடித்து, கூலியை எதிர்பாருங்கள் .(புகாரி, முஸ்லிம்)

بِسْمِ اللَّهِ وَ عَلَى سُنَّةِ رَسُولِ اللَّهِ.

76.மையித்தை கப்ரில் வைக்கும் போது: பிஸ் மில்லாஹி வஅலா சுன்னதி ரசூலில்லாஹி. பொருள்: அல்லாஹ்வின்

பெயராலும், அவனது தூதர் (ஸல்)அவர்களின் வழிமுறைப் படியும் அடக் கின்றோம். (அபூ தாவூது)

أَلسَّلَامُ عَلَيْكُمْ أَهْلَ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِينَ وَالْمُسْلِمِينَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَاحِقُونَ، نَسْأَلُ اللَّهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ.

77.**அஹ்லத் தியாரி, மினல் முஃ மினீன வல் முஸ்லிமீன வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன். நஸ் அலுல்லாஹ லனா வலகு முல் ஆஃபியா.** பொருள்: முஸ் லிம்கள், முஃமின்கள் வீட்டில் வசிப்போரே! அல்லாஹ்வின் அருள் உங்கள் மீது உண்டாகட்டும். அல்லாஹ் நாடினால் உங்களிடம் நாங்களும் வந்து சேர்வோம். எங்களுக்கும் உங் களுக்கும் நலன்விளைய அல்லாஹ்விடம் வேண்டுகிறோம். (முஸ்லிம்)

أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ.

78.**கோபம் வரும் போது: அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்** (விரட்டப்பட்ட ஷைத்தானை விட் டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத்தேடுகிறேன்.) (புகாரி)

## திருக் குர்ஆனிலிருந்து சில துஆக்கள்.

رَبِّ اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ، رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِي صَغِيرًا.

79.**பெற்றோருக்காகக் கேட்கும் துஆ: ரப்பிஃக் ஃபிர்லீ வ லிவாலிதைய்ய ரப்பிர்ஹம் ஹுமா கமா ரப்பயானீ ஸஃகீரா** பொருள்: என் இறைவா! என்னையும் என் பெற்றோர்களையும் மன்னித்து அருள்புரிவாயாக இறைவனே! நான் சிறுபிள்

ளையாக! இருந்தபோது, என்னைப் பரிவோடு அவ்விருவரும் வளர்த்தது போல, நீயும் அவ்விருவருக்கும் கிருபை செய்வாயாக!. (71:28) (17:24).

رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَاجِنَا وَ ذُرِّيَاتِنَا قُرَّةَ أَعْيُنٍ وَّاجْعَلْنَا لِلْمُتَّقِيْنَ إِمَامًا. رَبِّ اجْعَلْنِي مُقِيمَ الصَّلٰوةِ وَمِنْ ذُرِّيَّتِي، رَبَّنَا وَتَقَبَّلْ دُعَآءِ، رَبَّنَا اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِينَ يَوْمَ يَقُومُ الْحِسَابُ

**80.கணவன், மனைவி இருவரில் ஒருவர் மற்றொருவருக்காகவும், தம்மக்களுக்காகவும் கேட்கும் துஆ: ரப்பனா ஹப்லனா மின் அஸ்வாஜினா வதுர்ரிய்யாதினா குர்ரத அஃயுனின் வஜ்அல்லனா லில் முத்தஃகீன இமாமா. ரப் பிஜ்அல்னீ முகீமஸ் ஸலாத்தி வமின் துர்ரிய்யத்தீ ரப்பனா வதகப்பல் துஆஃ ரப்பனஃக்ஃபிர்லீ வலிவாலிதைய்ய வ லில் முஃமினீன யவ்ம யகூமுல் ஹிஸாப்.** பொருள்: எங்கள் இறைவா! எங்கள் துணைவர்களிடமும், எங்கள் சந்ததியரிடமுமிருந்து எங்களுக்குக் கண்களின் குளிர்ச்சியை அளிப்பாயாக! இன்னும் எங்களை பயபக்தியுடையவர்களுக்கு வழிகாட்டும் தலைவர்களாக ஆக்கியருள்வாயாக!.என் இறைவனே! என்னையும், என்னுடைய சந்ததியிலுள்ளோரையும் தொழுகையை நிலை நிறுத்துவோராக ஆக்கியருள்வாயாக! என்னுடைய பிரார்த்தனையையும் ஏற்றுக்கொள்வாயாக! எங்கள் இறைவா! என்னையும், என் பெற்றோர்களையும், முஃமின்களையும் கேள்வி கணக்குக் கேட்கும் மறுமை நாளில் மன்னித்தருள்வாயாக! (25:74). (14:40,41).

رَبِّ زِدْنِي عِلْمًا. رَبِّ اشْرَحْ لِي صَدْرِي وَيَسِّرْ لِي أَمْرِي وَاحْلُلْ عُقْدَةً مِّنْ لِسَانِي يَفْقَهُوا قَوْلِي.

81.கல்வி அறிவு அதிகரிக்க: ரப்பி ஸித்னீ இல் மா. ரப் பிஷ்ரஹ்லீ ஸத்ரீ வயஸ்ஸிர்லீ அம்ரீ வஹ்லுல் உக்ததம் மில்லிஸானீ யஃப்கஹூ கவ்லீ. பொருள்: என் இறைவா! கல்வி ஞானத்தை எனக்கு அதிகப்படுத்துவாயாக! என் இறைவா! எனக்கு என் நெஞ்சத்தை நீ விரிவாக்கித் தருவாயாக! என் காரியத்தை எனக்கு நீ எளிதாக்கியும் வைப்பாயாக!எனது சொல்லை அவர்கள் விளங்கிக் கொள்வதற்காக,என் நாவிலுள்ள முடிச்சை அவிழ்த்திடுவாயாக! (20:25,114).
குறிப்பு: குர்ஆனில் கீழ்காணும் எண்களில் உள்ள வசனங்களிலும் இன்னும் பல வசனங்களிலும் கருத்தாழமிக்க,சிறந்த துஆக்கள் வந்துள்ளன. (2:201,286) (3:8,147,193) - (7:23, 89,126,149) - (18:10) - (21:83,87,89,) - (23:97,98) - (25:65) - (26:83,84,85) - (37:100) - (59:10) - (66:8).

أَللَّهُمَّ آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً، وَفِي الآخِرَةِ حَسَنَةً، وَقِنَا عَذَابَ النَّارِ.

82.அல்லாஹும்ம ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனதன், வஃபில் ஆகிரத்தி ஹஸனதன், வகினா அதாபன்னார். பொருள்: யா அல்லாஹ்! எங்களுக்கு இவ்வுலகிலும் மறு உலகிலும் நற்பாக்கியங்களைத் தந்தருள்வாயாக! இன்னும் எங்களை நரக நெருப்பின் வேதனையை விட்டும் பாதுகாத்து அருள்வாயாக! என்று நபி (ஸல்)அவர்கள் அதிகம் துஆக்

கேட்பார்கள் என அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார் கள். (புகாரி, முஸ்லிம்)

83.நான் சுவனத்தின் பொக்கிஷங்களிலிருந்து ஒரு பொக்கி ஷத்தை உமக்கு அறிவிக்கட்டுமா? என்று என்னிடம் ரசூல் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான் சரி என்று சொல்ல, அ வர்கள் **லாஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்** (மகத் துவமிக்க உயர்வான அல்லாஹ்வின் துணையின்றி பாவத்தி லிருந்து தப்பித்துக்கொள்ளவும், நன்மையான காரியங்களைச் செய்யவும் சக்தி இல்லை) என்பதுதான் அது என்று கூறி னார்கள் என அபூ மூஸா (ரலி) அறிவிக்கிறார்கள்.(புகாரி)

سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهِ سُبْحَانَ اللّٰهِ الْعَظِيمِ.

84.அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நாவிற் கு இலகுவான, மீஸான் (தராசில்) கனமான, ரஹ்மானுக்கு மிக உவப்பான இரு சொற்றொடர்கள் **சுப்ஹானல்லாஹி வ பி ஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அழீம்** ஆகியவையாகும் என ரசூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்).

**பொருள்:** இறைவன் மிகத் தூய்மையானவன்: அவனுடைய பு கழைக் கொண்டு அவனைத் துதிக்கிறேன். மகத்துவமிக்க இறைவன் தூயவன்!

**وصلى الله وسلم وبارك على نبينا محمد وعلى آله**
**وأصحابه أجمعين ،والحمد لله رب العالمين.**

